இதனை "மாண்டா ரெலும்பணி" என்னுந் திருப்புகழில், "சடையாண்டார் இறைஞ்ச மொழிந்ததை ** (அருளாயேல் வேண்டாமை ஒன்றை அடைந்து உ(ள்)ளம் மீண்டாறி நின் சரணங்களில் வீழ்ந்தாவல் கொண்டு உருகு அன்பினை உடையேனுப்" — (1187) என வருவதால் அறிகின்றோம்.

இத் தந்திரத்துக்கும் இறைவன் அகப்படவில்லை போலும். பின்னர், "நீ கங்கை சூடிக்குச் செய்த உபதேசத்தை எனக்கு உரை செய்தால் உன் குருத்துவம் சற்றேனும் குறையுமோ" எனச் சற்று வைதும் பார்த்தார். இதனை "கங்கைவைத்த நம்பர் ** பெறப் பகர்ந்த உபதேசம் சிறியேன் தனக்கும் உரைசெயிற் சற்றும் குருத்துவங் குறையுமோ தான்?" எனவருந் திருப்புகழிற் (723) காண்க. இங்ஙனம் பலவிதம் அந்த ரகசியத்தை அறிய முயன்ற அருணகிரியார் ஈற்றில் வென்றனர். அந்த ரகசியத்தை அருணகிரியார் வேண்டுகோட் கிரங்கி முருகபிரான் அவர்க்கும் உபதேசித்துள்ளார் என்பதையும் அது இன்னது என்பதையும் குறிப்பாகக் கந்தரநுபூதியிலும், சற்று வெளிப்படையாகக் கந்தாலங்காரத்திலும், தெளிவாகத் திருப்புகழிலும் அருணகிரியாரே குறிப்பிக்கின்றனர். கந்தர் அநுபூதியில்,

"காதா குமரா கமலன் றரனுர்
ஓதாய் என ஓதிய தெப்பொருள்தான்" — எனக்

கேட்ட வினவுக்கு விடை பின் இரண்டடிகளிலேயே வெகு குறிப்பாக உள்ளது. எங்ஙனம் எனில், வேதா முதல் விண்ணவர் சூடும் மலர்ப்பாதனைய் நீ யிருந்தும் "நீ குறமின் பதசேகரன்" — என்றாரே அதுதான். எப்படி என்றால், "யான் எனது" என்னும் இரண்டும் எங்கே அற்றுள்ளனவோ அங்கே இறைவனைக் காணலாம். அங்கே இறைவன் தானே சென்று நின்று தோன்றுவன். வள்ளியம்மை முருகபிரானையே நாடிநின்ற காரணத்தால் முருகர் வள்ளியின் தினைப்புனத்துக்குத் தானே சென்றார். குறமின் (வள்ளி) பாத சேகரர் ஆனார்: எனவே, தன்னை யிழந்தால் தலைவனைக் காணலாம் - என்பதே ரகசியப் பொருள். இந்நிலையை அநுட்டானத்திற் கொண்டு

வந்து நடத்தினவள் வள்ளி யம்மையே. அவள் நிலையை உணர்ந்த முருகர் தாமே அவளை நாடிச் சென்று கல்யாணம் முயன்றார் என்பதை,

"இன்னங் குறித்து அடியேன் செவி நீயன்று கேட்கச் சொன்ன
குன்னம் குறிச்சி வெளியாக்கி விட்டது * * சிறுமிதனை
முன்னம் குறிச்சியிற் சென்று கல்யாண முயன்றவனே" (24)

என்னும் கந்தரலங்காரத்திற் காண்க. இதன் பொருள் "முருகா! என் மனக் கிலேசத்தை அறிந்து (நான் வேண்டின) ஒரு ரகசியத்தை நீ உபதேசித்தாய். அந்த ரசசியம் இன்னதென்பதை குறிஞ்சிநில ஊராகிய வள்ளிமலை எனக்கு வெளியாக்கி விட்டது எப்படி யென்றால், அவ் வேட்டுவச் சிறுமியை நாடி நீயே அவளிருந்த ஊருக்குச் சென்று அவளைக் கலியாணம் செய்து கொள்ள முயன்றுயாதலின்". இச் செய்யுளில் "சென்று" என்பது எத்துணைப் பொருளாழத்துடன் கூடியது! இறைவன் தானே சென்றார் என்பதுதான் அவரது அருட்டிறம். இந்த அலங்காரச் செய்யுளால் வள்ளியம்மை கைப்பற்றின நன்னெறியே இறைவனை வசப்படுத்தக் கூடியநெறி என்பதும் இந்த நெறியையே கைப்பற்றுக - எனவும் அருணகிரியார்க்கு முருகர் உபதேசித்தனர் என்பதும் தெரிகின்றன. இதுவே "தன்னை மறந்தாள் தன் நாமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே" என அப்பர் சுவாமிகள் குறிப்பிட்டதிலை. இந்நெறியை அருணகிரியார் சுருக்கமாக "வள்ளிச் சன்மார்க்கம்" எனக் குறிக்கின்றனர் இதற்கு "வள்ளி அநுட்டித்த நன்னெறி" என்பது பொருள். எனவே, முருகபிரான் உபதேசித்த ரகசியப் பொருள் என்ன என்றால் யாரொருவர் தன்னை யிழந்து (யான் - எனது என்பன அற்று) தலைவனை நாடுகின்றனரோ அவரை இறைவன் தாமே நாடிவந்து அருள்புரிவன் என்பது தெளிவு. இந்த 'வள்ளிக் சன்மார்க்க' ரகசியத்தைத் தான் முருகபிரான் சிவபிராற்கு உபதேசித்தனர் என்பது "கள்ளக் குவாற்பை" (317) என்னுந் திருப்புகழில்,

"வள்ளிச் சன்மார்க்கம் விள்ளைக்கு நோக்க
வல்லைக்கு ளேற்றும் இளையோனே" —

என அருமையாக விளக்கப்பட்டுளது. இதன் பொருள்—இன் ஐக்கு - ரகசிய உபதேசம் எது என்று வினவிய தந்தைக்கு, வள்ளிச் சன்மார்க்கம் - வள்ளி அநுட்டித்த நல்வழியே தலைவனை (கடவுளை) வசப்படுத்தும் வழியென்று, நோக்கவல்லைக்குள் - ஒருநொடிப் பொழுதில் (விரைவில், கண்ணிமைப் பொழுதில்), ஏற்றும் (அவர் காதில் ஏற்றிய) உபதேசித் தருளிய, இளையோனே - குழந்தைக் குருநாதனே" என்பது. அந்த ரகசிய வழியை அநுட்டித்தவள் வள்ளி. இந்த ரகசியத்தைத் தான் முருகபிரான் சிவபிராற்கு உபதேசித்தனர். "வள்ளிச் சன்மார்க்கமே" ரகசியப் பொருள். இவ்வுண்மையை வள்ளி கல்யாண தத்துவத்தை விளக்க எளியேன் இயற்றிய பின் வரும் பாட்டில் தெளிவுபெறக் காணலாகும்:—

வான்முட்டு மலைக்கனி நீ யதனால் வள்ளி
மலைக்[1]கனியை யடைவதற்கே நாடிச் சென்றாய்!
மாதவட்கு மயலளிப்பச் செட்டி யானாய்
மற்றதுதான் [2]உங்கள்குல தருமம்! வள்ளி
மான்குட்டி யாதலினால் வேங்கை யாகி
மற்றவளை அகலாது மருங்கே நின்றாய்!
வள்ளிகிழ வோனென்றே காட்டுதற்கு
வள்ளியிடங் கிழவனாய் லீலை செய்தாய்!
"யான்" கொட்டு மறுநீங்கிப் பத்தி செய்வோர்
சேவல் செயும் பணியாளன் ஈசன் என்னும்
இன்பநிலை காட்டுதற்கே வள்ளி பாதம்
இறைஞ்சினை நீ! அதனுண்மை இன்றுணர்ந்தேன்!
தேன்சொட்டு கடம்பணியுஞ் சேயே! உன்றன்
திருவிளையாட் டின்பெருமை செப்பற் பாற்றோ!
சிந்திப்போர் நெஞ்சகத்தில் ஊறுந் தேனே!
திருத்தணிகை மலைவாழுந் தேவ தேவே!

வேலு மயிலுந் துணை



[1] கனி - கன்னி. [2] சிவபிரானும் செட்டியாய் வளையல் விற்றார்.

